[9th September 1958

ஆகவே பாரம்பரியம் என்ற முறையை மாற்றி தகுதியுள்ளவர்கள் என்பதைப் போடுவதற்கு அரசாங்கம் ஏதாவது உத்தரவு போடுவார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது கிராம உத்தியோகஸ்தர்களுடைய அமைப்பை மாற்றி அமைப்பதற்கு என்று ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டு அந்தக் கமிட்டியும் முன் கிராம உத்யோகஸ்தர்களுடைய அமைப்பைப்பற்றி பரிசீலனை செய்து வருகிறது. கூடிய சீக்கிரத்தில் அதைப் பற்றி ஏதாவது முடிவு செய்யப்படும். பரிசீலனை முடிவடைந்து முடிவு கூறும்போது இந்த விஷயமும் அதில் அடிப்பட்டுப்போய் விடும்.

SRI S. NAGARAJA MONIGAR : கிராம உத்யோகஸ்தர்கள் அவர்களுடைய பதவி விஷயமாக கோரி வரும் விண்ணப்பங்கள். அப்படி நியாயமாக கோரி வருபவைகள் எல்லாம் ரிவினியூ போர்ட் வரையில் தான் வருகிறதா, அவர்களுடைய விண்ணப்பங்கள் ரிவினியூ போர்டிலியே பைசல் செய்யப்பட்டு விடுகிறதா அல்லது ரிவினியூ போர்டின் பைசலுக்குக் பிறகு சர்க்கார் வரையிலும் வருகிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : சர்க்கார் வரையிலும் வருகிறது.

SRI S. LAZAR : இது போன்ற அப்பீல்கள் குறுகிய காலத்திலேயே தீர்ப்பளிக்கப்படுகிறது என்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார். அந்தக் குறுகிய காலம் என்ன, எவ்வளவு என்பதை நான் அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினரே ஒரு அட்வோகேட். எல்லா கேஸ்களும் ஒரே காலத்தில் தீர்ப்பு அளிக்கப்பட மாட்டாது என்பது அவருக்கே தெரியும். சில கேஸ்கள் ஒரு வருடத்திலும் சில கேஸ்கள் இரண்டு வருஷங்களிலும் தீர்ப்பளிக்கப்படலாம். அதைப் போலவே இங்கேயும் ஒரு திட்டவட்டமாகச் சொல்வதற்கு இல்லை.

*Land holdings*

* 97 *Q*.—SRI S. LAZAR: Will the Hon. the Minister for Revenue be pleased to state the steps taken by the Government—

(i) to prevent fragmentation of land holdings; and

(ii) to promote consolidation of land holdings?

THE HON. SRI M. A. MANICKAVELU : The matter is under the consideration of the Government. No decision has yet been arrived at.

SRI S. LAZAR : Is there any Act of the Central Government to this effect and is it not a fact that certain States are implementing it? May I know why there is so much delay in our State alone?

THE HON. SRI M. A. MANICKAVELU : One difficulty that we came across is that any legislation for consolidation and prevention of fragmentation of holdings will directly affect the law of inheritance which will lead to a number of other complications. That was one of the reasons why we could not implement it.

9th September 1958]

SRI K. ANBAZHAGAN : அந்தக் கேள்வியினுடைய நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு ஏதுவாக கூட்டுறவு முறையில் சாகுபடியை பல இடங்களில் கொண்டு வரப்படும் என்ற கருத்து அரசாங்கத்தாரால் முன்னர் தெரிவிக்கப்பட்டது. அந்த நோக்கம் எந்த அளவு நிறைவேறியிருக்கிறது?

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்த முயற்சி எடுத்துக் கொள்ளப்பட்டது. அதன்படி மூன்று இடங்களில் கூட்டுறவு சொஸைட்டிகள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் அவைகள் அவ்வளவு திருப்திகரமாக வேலை செய்யவில்லை.

SRI M. JAGANNATHAN : The Hon. Minister has stated that any attempt to prevent fragmentation of holdings will affect the law of inheritance. Will the Government consider the desirability of recommending to the Union Government to amend the law of inheritance in such a way as to accept the principle of the law of primogeniture?

THE HON. SRI M. A. MANICKAVELU : It is a very general and all-embracing question. So, I am not in a position to give a direct answer to it now.

SRI K. B. S. MANI : சர்க்கார் கூட்டுறவு முறையில் இந்த திட்டத்தை நல்ல முறையில் ஆரம்பித்து பயன்படுத்த வேண்டும் என்றும் அதற்காக தனிப்பட்ட அதிகாரிகளையும் ரிஜிஸ்தரார்களையும் நியமித்து பல இடங்களில் கூட்டுறவு முறையில் பண்ணைகளை ஏற்படுத்த வேண்டும் என்று முயற்சி எடுத்துக்கொண்ட போது பல இடங்களில் தனிப்பட்ட சில மடாதிபதிகள் பண்ணைகளை ஏற்படுத்த முடியாதபடி நிலங்களை காலாகாலத்தில் கொடுக்காமல் தடுத்திருக்கிறார்கள். அவர்கள் பேரில் சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : அம்மாதிரியான தகவல் ஒன்றும் அரசாங்கத்திற்கு வரவில்லை. அப்படி தடுத்திருந்தால் அது எல்லோருக்கும் தெரிந்திருக்கும்படியாக அவர்கள் தடுத்திருக்க மாட்டார்கள்.

*Fudukulattur taluk*

* 101 Q.—SRI A. PERUMAL : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) இராமநாதபுரம் ஜில்லா முதுகுளத்தூர் தாலுகா அபிவிருத்தி சம்பந்தமாக யூனியன் அரசாங்கம் சென்னை அரசாங்கத்திற்கு ஏதாகிலும் உத்திரவு பிறப்பித்துள்ளதா ?

(ஆ) அப்படியானால் அந்த வேலை எப்போது தொடங்கும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) No, Sir.

(b) Does not arise.

SRI A. GOVINDASAMY : முதுகுளத்தூர் பகுதி மிகவும் பிற்போக்கான கவனிக்கப்படாத பகுதி என்று அரசாங்கமே ஒப்புக்கொண்டிருக்கிறது. அப்படியானால் அதை முன்னேற்றத்திற்குக் கொண்டு வருவதற்கு தீவிர நடவடிக்கை எடுத்திருக்கிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அது பிற்போக்கான பகுதிகளில் ஒன்று என்று சர்க்கார் ஒப்புக்கொண்டு அதற்காக இப்பொழுது தேசிய அபிவிருத்தி திட்டம் அங்கே அமுல் நடத்தப்படுகிறது. அத்துடன்